திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரின் சந்திப்பைச் சிறப்பிக்கும் வகையிலேயே இக்கோயிலில் எம்பெருமக்கள் மூவருக்கும் சந்தித்தவர் பூசை செய்யவேண்டுமென்று செல்வனான சிறுத்தொண்டன் வழிவகைச் செய்துள்ளான். இதன் வாயிலாக இவன் சைவத்தின் மீதும், தேவார முதலிகள் மீதும் அளவற்றப் பற்றுக் கொண்டிருந்தான் என்பதை எண்ணும்போது உள்ளம் பூரிக்கிறது. அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான சிறுத்தொண்டன் என்பவரின் பெயர் இவனுக்குச் சிறப்புப்பெயராக சூட்டியிருக்கலாம்.

இந்த சந்தித்தவர் பூசை எவ்வாறு நடத்தவேண்டும் என்பதும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதாவது தினமும் ஆற்றிலிருந்து திருமஞ்சனம் என்னும் புனித நீர் தூணி பதக்கு அளவு எடுத்து வந்து நீராடல் செய்யவும்; மாலை வேளையில் இவர்களுக்கு சந்தி விளக்கு இரண்டு வைக்கவும்; இவர்களுக்கு சாத்துவதற்கு உரிய ஆடைகளும் (பரிசட்டம்), பூமாலைகள் (திருப்பள்ளித்தாமம்), படைப்பதற்கு திருஅமுதும் செய்து வழிபாடு செய்திட வேண்டும் என்ற நிபந்தனைகளும் இடப்பட்டுள்ளன. இவர்களுக்கு படைப்பதற்கு செய்யப்படும் உணவின் அளவும், அதில் சேர்க்கவேண்டிய பொருட்களின் அளவும் சொல்லப்பட்டுள்ளது. இவ்வுணவு 4 நாழி அரிசி, 4 பலம் கறிகள், இதுக்குத்தக்க உப்பு, மிளகு, நெய் முதலியவற்றைக் கொண்டு செய்தளிக்கக் கூறப்பட்டுள்ளது. இப்பொருட்களைக்கொண்டு செய்யப்பட்ட உணவு இன்றைய சாம்பார்சாதம் போல இருந்திருக்கலாம்.

இவ்வாறு வழிபாடும், உணவும் படைத்திட வேண்டி இக்கோயில் பண்டாரத்தில் 5000 காசுகள் அளிக்கும்போது, இக்கோயில் பண்டாரத்தை நிர்வகிக்கும் கண்காணிகளான மகேசுவரர்கள், கோயில் நிர்வாகம் செய்யும் தேவகன்மி, இக்கோயில் கணக்கன் முன்னிலையில் இக்காசு ஐயாயிரத்தினை ஒப்படைத்த விவரமும் கிடைக்கிறது. இவன் காசுகள் கொடுத்த நாளும் விவரமாகக் கிடைக்கிறது. அதாவது அவ்வாண்டு கன்னி நாயற்று (புரட்டாசி மாதம்), வளர்பிறை பன்னிரெண்டாம் நாளான புதன்கிழமை, அஸ்த நட்சத்திரத்து அன்று தானமாக வழங்கியுள்ளான். அதற்கு இணையான நாள் கி.பி. 1297.

மேலும், செல்வன் என்கிற சிறுத்தொண்டன் என்னும் இவன் இக்கோயிலில் எம்பெருமக்கள் மூவரையும் எழுந்தருளிவித்துள்ளதாக இக்கல்வெட்டில் குறிப்பும் காணப்படுகிறது. எனவே இவன் எழுப்பிய உருவங்கள்

கற்சிலைகளாக வடிக்கப்பட்டவைகளா? அல்லது செப்புத் திருமேனிகளாக வடித்தளித்துள்ளானா என்ற சந்தேகம் எழுவது இயற்கை. இச்சிலைகள் செப்புப் படிமங்கள் என்று ஓர் ஆய்வாளர் கூறியுள்ளார்.[7] இக்கல்வெட்டில் தினசரி வழிபாடு செய்யவும், சந்தி விளக்கு வைக்கவும் கூறியிருப்பதன் வாயிலாக இவ்வுருவங்கள் கற்சிலைகளாக வடிக்கப்பட்டவை என்பது கல்வெட்டு விவரங்களை சற்று உற்று நோக்கும்போது தெரியவருகிறது.

ஏனெனில் செப்பு படிமங்களாக இருப்பின் அவை குறிப்பிட்ட சிறப்பு நாட்களின்போதே வெளியே எடுத்து வைத்து வழிபாடு செய்யப்படும். பின்னர் பாதுகாப்பு கருதி அவை மீண்டும் பாதுகாப்பான இடத்தில் வைக்கப்படுவது வழக்கம். இவன் எழுந்தருளிவித்தவை கற்சிலைகள்தான் என்று கூறலாம். மேலும் தென்புறத் திருச்சுற்று மாளிகையில் சைவ சமயக்குரவர்கள் நால்வரில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய இம்மூவரின் உருவங்களும் ஒரே காலகட்டத்தைச் சார்ந்தது என்பதே அச்சிலைகளை நோக்கும்போது தெரியவருகிறது. நான்காமவரான மாணிக்கவாசகரின் சிற்பம் காலத்தால் சிறிது பிற்பட்டது. அக்கற்சிலைகள்தான் செல்வன் வைத்ததா என்ற ஐயம் எழுவது இயற்கை. அதற்கும் இதற்கும் சம்பந்தம் உண்டா என்ற வினாவும் எழுந்தது.

இக்கோயில் திருச்சுற்று மாளிகை தென்பகுதியில் இம்மூவர் சிற்பங்களும், இத்திருச்சுற்றில் மூவர் சிலைகளுக்கு எதிரே உள்ள தூணில் இவனது பெயர் பொறித்த கல்வெட்டு மற்றும் இவனது சிற்பமும், இவை இரண்டிற்கும் எதிரே கோயில் முன்மண்டபத் தெற்குச் சுவரில் இவன் கொடையளித்த செய்தி கூறும் கல்வெட்டும் அமைந்துள்ளன. மூவர் சிற்பம், இவனது பெயர் பொறித்த கல்வெட்டு, இவனது சிற்பம், கல்வெட்டு ஆகியவை ஒரே காலகட்டத்தைச் சார்ந்தது. அதாவது கி.பி. 13-ஆம் நூற்றாண்டாகும். இவற்றினை ஒன்றுடன் ஒன்று இணைத்து ஆய்வு செய்ததில் மூன்றாம் குலோத்துங்கனின் 29-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1207) செல்வனான சிறுத்தொண்டன் கல்வெட்டில் தாம் எடுப்பித்ததாகக் கூறும் 'எம்பெருமக்கள் மூவர்' சிற்பங்கள் இவைகள்தான் என்பதற்கு மேற்கூறிய காரணங்கள் வலுசேர்க்கின்றன.

ஆறகளூர் ஊரைச் சார்ந்த செல்வன் என்கிற சிறுத்தொண்டன் தனது பெயருக்கு ஏற்றவாறு சைவத்தின் மீது ஈடுபாடும், நாயன்மார்களின் மீது பெருமதிப்பும் கொண்டிருந்தான். அதிலும் குறிப்பாக தேவாரம் பாடிய மூவர் மீதும் எல்லையில்லாத மிகுந்த பக்தியையும் கொண்டிருந்தான் என்பதை

எம்பெருமக்கள் மூவருக்கும் சிலை எடுத்தும்; வழிபாடு நடத்துவதற்கு பொருளுதவி கொடுத்தும் சிறப்பித்துள்ளதின் வாயிலாக விளங்கலாம். எவ்வாறாயினும் 'சிறுத்தொண்டன்' என்ற சிறப்புப் பெயர் இவனுக்கு சாலவே பொருந்தும் என்பதில் ஐயமில்லை.

அக்காலத்தில் வாழ்ந்த பெரியோர்கள் தாங்கள் மேற்கொண்ட சமயத்தின் மீதான பற்றும்; அதற்கேற்றவாறான செயல்களையும் மேற்கொண்டனர். அவர்கள் செய்த அறக்கொடைகளும், அவற்றினை நடத்துவதற்குத் தேவையான பொருள்களையும், நடைமுறைகளையும், எவ்வாறு நடத்திட வேண்டுமென்ற நிபந்தனைகளையும் வகுத்து, உரிய நபர்களின் முன்னிலையில் கொடுத்து, தொடர்ந்து நடத்திடுவதற்கு ஏற்றவாறு ஆவணம் செய்தளித்துள்ளனர் என்பதை இக்கல்வெட்டு பறைசாற்றுகின்றது.

இவனது பெயர் பொறித்த சிற்பம், தேவார மூவர் முதலிகள் சிற்பங்கள் ஆறகளூரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செலுத்திய மகதை நாடாழ்வான் இராசராச வாணகோவரையன் சிற்பம் ஆகியவை இவ்விதழின் அட்டைகளில் உள்ளன. 'செல்வனான சிறுத்தொண்டன்' கொடையளித்தச் சிறப்பு வாய்ந்த கல்வெட்டு வாசகம் இதோ:-

**கல்வெட்டு வாசகம்**

1. ஸ்வஸ்திஸ்ரீ *திரிபுவ*னச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபத்தொன்பதா
2. வது மிலாடாகிய சனநாத வளநாட்டு ஆற்றூற் கூற்றத்தாறகளூரில் உடையார் திருக்காமி*ஸ்வர*மு
3. டைய நாயனார் கோயிலில் எம்பெருமக்கள் மூவரையும் எழுந்தருளிவித்த மேற்படியூரில் இருக்கு
4. ஞ் செல்வனான சிறுத்தொண்டனேன் எம்பெருமக்களுக்குச் சந்தித்தவர் பூசை செய்யும்
5. படி நாள் ஒன்றுக்கு ஆற்றில் திருமஞ்சணந் தூணி பதக்கும் அந்திச் சந்தி விளக்கு இர
6. ண்டுஞ் சாத்தியருள பரிசட்டமுந் திருபள்ளித்தாமமுந் திருஅமுதுக்கு அரிசி நாநாழியுந்

7. கறியமுது நாற்பலமு இதுக்குத் தக்க உப்பு மிளகு நெய்யமுதுஞ் செல்வதாக இன்னாய

8. நார் ஸ்ரீபண்டாரத்து ஸ்ரீமாஹேஶ்வரக் கங்காணி செய்வார்களுந் தேவர்கன்மி கோ

9. யிற் கணக்கனும் முன்னிலையாக இவ்வாண்டைக் கன்னி நாயற்று பூவபக்ஷ

10. த்து ஷ்திதியையும் புதன் கிழமையும் பெற்ற அத்ததிருநாள் ஒடுக்கின அன்றாடு நற்காசு

11. ருநு இக்காசு ஐய்யாயிரமும் ஸ்ரீபண்டாரத்து ஒடுக்கி இப்படி சந்திராதித்தவரை

12. பூசை செலுத்தக்கடவதானமைக்கு இது பன்மாஹேஶ்வர இரக்ஷை இது அழிவு செ

13. ய்வான் கெங்கையிடை குமரியிடை செய்தார் செய்த பாவங்கொள்வான் ஶிவ

14. உஷூ உ இவன் எம்பெருமக்களுக்கு இட்ட பரிகலமூன்றிநாள் எடை சயஅ லம் திருவட்டணைக்கால் ஒன்றிநால் எடை எய லம் தரா

**அடிக்குறிப்புகள்**

1. சதாசிவ பண்டாரத்தார், தி.வை. 'பிற்காலச் சோழர் வரலாறு', அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 2008, பக். 358
2. மேலது. 359
3. பூங்குன்றன், ர. 'ஆறகளூர்' கல்வெட்டு காலாண்டிதழ்-16, த.நா. அரசு தொல்லியல் துறை, சென்னை, பக். 6
4. வேங்கடராமையா, கா.ம. 'கல்வெட்டில் தேவார மூவர்' சேகர் பதிப்பகம், சென்னை 2005, பக். 89
5. சிவனடியார்களுக்கு தொண்டு செய்வது நாயன்மார்களின் முக்கியக் குறிக்கோளாகும். அதுபோல சிவனடியார்களுக்கு தொண்டு செய்த இச் 'சிறுதொண்டன்' தனது முன்னவர்களை 'எம்பெருமக்கள்' என்று அழைத்துள்ளான் எனலாம்.
6. திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்தரை சீர்காழியில் முதன்முதலாக சந்தித்தபொழுது வணங்கத் திருஞானசம்பந்தர், நாவுக்கரசரை அப்பரே என்றழைத்ததாகப் பெரியபுராணம் பகர்கிறது.
7. பூங்குன்றன், ர. 'ஆறகளூர்' கல்வெட்டு காலாண்டிதழ்-16, த.நா. அரசு தொல்லியல் துறை, சென்னை, பக். 5



# அரிட்டாபட்டி தமிழ் - பிராமி கல்வெட்டுகள்

4

சீ. இராமச்சந்திரன்
சிறப்புநிலைக் கல்வெட்டாய்வாளர் (ப.நி.)

மதுரையைச் சூழ அமைந்துள்ள திருப்பரங்குன்றம், சமணமலை, கொங்கர் புளியங்குளம், விக்கிரமங்கலம், அணைப்பட்டி, ஆனைமலை, மீனாட்சிபுரம் (மாங்குளம்), அழகர்மலை, கருங்காலக்குடி, கீழவளவு, திருவாதவூர், குன்னத்தூர் (வரிச்சியூர்) திருமலை, அரிட்டாபட்டி போன்ற பகுதிகளிலுள்ள மலைக்குன்றுகள் சங்ககாலத்தில், சமண மையங்களாகத் திகழ்ந்து வந்துள்ளன. இவற்றுள் அரிட்டாபட்டி, மதுரை - திருச்சி நெடுஞ்சாலையில், மதுரையிலிருந்து சுமார் 17 கி.மீ. தொலைவில் ஆனைமலைக்கு வடக்காகவும், நரசிங்கம்பட்டிக்கு வடமேற்காகவும் அமைந்துள்ளது. அரிட்டாபட்டி ஊருக்கு மேற்கில் 'கழிஞ்சமலை' என்றழைக்கப்படுகின்ற குன்றுள்ளது. இக்குன்றின் கிழக்குப்பகுதியில் 'பஞ்சவர் படுக்கை' என்றழைக்கப்படுகின்ற இயற்கையான குகைத்தளம் அமைந்துள்ளது. இக்குகைத்தளத்தில் மழைநீரைத் தடுப்பதற்காக வெட்டப்பட்ட புருவத்தின் கீழாக ஒன்றும், குகைத்தளத்தின் முகப்பில் வெட்டப்பட்ட புருவத்தின் மேலாக ஒன்றும் ஆக மொத்தம் இரண்டுத் தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் உள்ளன.

மேற்குறிப்பிட்ட இரு கல்வெட்டுகளுள் புருவத்தின் கீழே உள்ள கல்வெட்டு முனைவர் கே.வி. இராமன், முனைவர் எ. சுப்பராயலு ஆகியோரால் 1971-ஆம் ஆண்டில் கண்டறிந்து வெளிப்படுத்தப்பட்டது. புருவத்திற்கு மேலே உள்ள கல்வெட்டு தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை கல்வெட்டு ஆய்வாளர்களால் கண்டறிந்து வெளிப்படுத்தப்பட்டது. முதற் கல்வெட்டு வாசகம் திரு. ஐராவதம் மகாதேவன் அவர்களால் செம்மைப்படுத்தப்பட்டு

*"நெல்வெளிஇய் சிழிவன் அதினன்*
*வெளியன் முழாகை கொடுபிதோன்"*

என்ற வாசகம் வெளியிடப்பட்டது. இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள

'நெல்வெளிஇய்' இன்றைய திருநெல்வேலி ஊர்ப்பெயராகக் கொள்வது பொருத்தமாகப்படுகிறது 'சிழிவன்' என்ற ஆட்பெயர் விக்கிரமங்கலம் கல்வெட்டிலும் காணப்படுவதால் சங்ககாலத்தில் இப்பெயர் பரவலாக மக்கள் வழக்கிலிருந்துள்ளதெனலாம். அதினன் என்ற ஆட்பெயர் வடஆர்க்காடு மாவட்டம் செங்கம் பகுதியிலுள்ள ஆண்டிபட்டியில் கண்டறியப்பட்ட கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக் காசிலும் காணப்படுகிறது. அகநானூற்றில் (152 ; 5, 208 ; 5) காணப்படும் 'தித்தன் வெளியன்', 'வெளியன் வேண்மான்' போன்ற மக்கட்பெயரோடு ஒப்புமையுள்ளதாக இக்கல்வெட்டிலும் 'வெளியன்' என்ற பெயர் அமைந்துள்ளது. இந்த வகையில் சங்ககாலத்தில் மக்கள் வழக்கிலிருந்த ஆட்பெயராக 'சிழிவன் அதினன் வெளியனை'க் கொள்ளலாம். சிழிவன் என்பதைச் 'செழியன்' என்றதன் மாற்று வடிவமாகவும் கருதலாம். 'முழாகை' என்ற சொல்லில் உள்ள 'முழை' என்பதற்குக் 'குகை' என்ற பொருளுள்ளதால் முழாகை என்ற சொல் குகையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளதெனலாம். வரிச்சியூரிலுள்ள 'இளநகன் கருகிய நல் முழஉகை' என்ற தமிழ் பிராமிக் கல்வெட்டில் 'முழஉகை' சொல் குகை என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டிருப்பது ஒப்புநோக்குதற்குரியது.

இரண்டாவது கல்வெட்டு மிகவும் மெல்லிய கோடுகளாக, ஆழமின்றி சுமார் 3.10 மீட்டர் நீளத்தில் 34 எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் வாசகம் கீழ்வருமாறு:

*"இலஞ்சிய் எளம்பேரா அதன் மகன்*
*எமயவன் இவ் முழஉகைய் கொடுபிதவன்"*

இக்கல்வெட்டின் பொருள் 'இலஞ்சிய்' என்னும் ஊரைச் சேர்ந்த எளம்பேரா அதன் மகன் எமயவர் இந்த குகைத்தளத்தை உருவாக்கியளித்துள்ளார் என்பதாகும்.

மேற்சுட்டிய கல்வெட்டு வாசகத்திலுள்ள 'இலஞ்சிய்' என்ற பெயரில் திருநெல்வேலிப் பகுதியில் தென்காசிக்கருகே ஓர் ஊர் உள்ளது. முதற்கல்வெட்டில் 'திருநெல்வேலி' குறிக்கப்பட்டுள்ளதால் இரண்டாம் கல்வெட்டிலுள்ள இலஞ்சியை தென்காசிக்கருகே உள்ள ஊராகக் கருதுவது பிழையாகாது. இலஞ்சி என்ற சொல்லுக்கு ஏரி, வாவி, கொப்பூழ், குணம், சாரைப்பாம்பு, மகிழமரம் எனப் பல பொருள்களுண்டு. இவற்றுள் இவ்விலஞ்சியை ஏரியின் காரணமாகவோ, மகிழமரத்தின் மிகுதி காரணமாகவோ அமைந்த ஊராகக் கொள்ளலாம்.

'இளம்பேராதன்' என்னும் ஆட்பெயரில் காணப்படுவது போலவே மாங்குளம் கல்வெட்டில் காணப்படும் 'இளஞ்சடிகன்' புகழூர் கல்வெட்டில் காணப்படும் 'இளங்கடுங்கோ' அழகர்மலைக் கல்வெட்டில் காணப்படும் 'எளசந்தன்' 'எளஅ அடன்' போன்ற மக்கட் பெயர்களும் காணப்படுகின்றன. 'ஆதன்' என்ற ஆட்பெயரை ஆ+து+அன் எனப் பகுத்து படைப்பவன்; பொருளை வளமாக்குகிறவன் எனப் பொருள் கொள்வர். ஆதன் பெயருக்கு ஆன்மா, அறிவில்லாதவன், குருடன், அருகன், சைன மதத்தான் எனப் பல பொருள்களுண்டு. சமணரின் குகைக்கல்வெட்டில் காணப்படும் 'ஆதன்' என்னும் பெயருக்கு சைன மதத்தார் எனப் பொருள் கொள்வது ஏற்புடையதாக இருக்கும். ஆதன் என்ற பெயர் அழகர்மலை, குன்றக்குடி போன்ற பிற இடங்களிலுள்ள கல்வெட்டுகளிலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. சங்ககாலத்தவர்களான ஆதன் ஓரி (ஆதனின் மகன் ஓரி), வில்லியாதன், நல்லியாதன் போன்ற பெயர்களிலுள்ள 'ஆதன்' என்ற பெயர் சங்ககாலத்தில் இப்பெயர் மக்கள் வழக்கிலிருந்திருப்பதை உறுதிப்படுத்துகின்றன.

'இகர யகரம் இறுதி விரவும்' என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கு யகரத்திற்கு இகரமும், இகரத்திற்கு யகரமும் மாறி வரும் என்று பொருள் கொள்வதற்கு மாற்றாக, சொல்லின் இறுதியில் இகரத்திற்குப்பின் 'ய்' சேர்ந்து வரும் (விரவி) எனப் பொருள் கொள்வதே பொருந்தும் என்பதைத் தெளிவாக்கும் வகையில் இக்கல்வெட்டில் 'இலஞ்சிய்' என்ற ஊர்ப்பெயர் காணப்படுகிறது. மாங்குளம் கல்வெட்டிலும் இதே அமைப்பில் கணிய், வழுத்திய், பளிஇய் போன்ற சொற்கள் காணப்படுவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.



5

# தமிழ் – பிராமி கல்வெட்டுகள், குகைத்தளங்கள் உணர்த்தும் சமயம்

முனைவர் **வெ. வேதாசலம்**

சிறப்புநிலைக் கல்வெட்டாய்வாளர் (ப.நி.)

தமிழ்–பிராமிக் கல்வெட்டுகள் உள்ள குகைத்தளங்கள் எச்சமயத்தவர்க்கு உரியவை என்பதில் அறிஞர்களிடையே இன்றும் கருத்து வேறுபாடு நிலவி வருகிறது. இவை வேதநெறிக்குப் புறம்பான பௌத்த, சமண, ஆசீவக சமயத்தவர்க்குரியவை என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால் இம்மூவரில் யாருக்குரியது என்பதில் கருத்து முரண்பாடு உள்ளது. குகைத்தளங்களில் உள்ள கல்வெட்டுகள் மிகச் சுருக்கமானவை. இவற்றில் பெரும்பாலான கல்வெட்டுகளில் குகைத்தளங்களில் வாழ்ந்த சமயத்தவர் பற்றி வெளிப்படையான சான்றுகள் கிட்டவில்லை. இதனால் இவை பௌத்த சமயத்தவர்க்குரியதா? சமண சமயத்தவர்க்குரியதா? ஆசீவக சமயத்தவர்க்குரியதா? என்பதில் இன்றும் விவாதங்கள் நடைபெற்று வருகின்றன.

டி.வி. மகாலிங்கம்,[1] ஆ. வேலுப்பிள்ளை[2] போன்றவர்கள் தமிழ்–பிராமிக் கல்வெட்டுகள் உள்ள குகைத்தளங்கள் சில சமணத்திற்கும் சில பௌத்தத்திற்கும் சில ஆசீவகத்திற்கும் உரியவையாக இருக்கலாம் என்று கருதுகின்றனர். கே.வி. சுப்பிரமணிய அய்யர், திரு வெங்கைய்யா போன்றவர்கள் அனைத்துக் குகைத்தளங்களும் பௌத்த சமயத்தவர்க்குரியவை என்று எண்ணுகின்றனர்.[3] க. நெடுஞ்செழியன் போன்றவர்கள் இவற்றை ஆசீவகர்களுக்குரியவையே என்று கூறி வருகின்றனர்.[4] எச். கிருஷ்ணசாஸ்திரி போன்றவர்கள் இக்குகைத்தளங்களில் பழங்குடிகளும் பின்னர் பௌத்தர்களும் அதன்பின்பு சமணர்களும் வாழ்ந்துள்ளனர் என்று கருதுகின்றனர்.[5] அண்மைக்காலத்தில் பல புதிய தமிழ்–பிராமிக் கல்வெட்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. தமிழ்–பிராமிக் கல்வெட்டுகள் மீளாய்வு செய்யப்பட்டு மீண்டும் ஓரளவு நன்கு படிக்கப்பெற்று திருந்திய வாசகங்கள் வெளிவந்துள்ளன. இப்பின்னணியில் இவை எச்சமயத்தவர்க்குரியவை என்று ஆய்வு செய்து ஏதேனும் ஒரு முடிவுக்கு வர வாய்ப்புகள் உள்ளன.

**பௌத்தம்**

தமிழ்-பிராமிக் கல்வெட்டு உள்ள குகைத்தளங்கள் அனைத்தும் பௌத்த சமயத் துறவிகள் தங்குவதற்குரியவை என்று கருதும் கே.வி. சுப்பிரமணிய அய்யரின் கருத்து தமிழ்-பிராமி கல்வெட்டுகள் கண்டறிந்து அவற்றைப் படிக்கத் தொடங்கிய தொடக்கக் காலமாகும். தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் உள்ள குகைத்தளங்களின் அமைப்பு இலங்கையில் பௌத்த துறவிகள் வாழ்ந்த பிராமி கல்வெட்டு குகைத்தளங்களோடு ஒத்துக்காணப்படுகின்றன. தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளில் வரும் பெயர்களும், கல்வெட்டுகள் காணப்படும் மலைகளுக்கு வழங்கும் பெயர்களும் இவை பௌத்த சமயத்தவர்க்குரியவை என்பதை உறுதிப்படுத்துகின்றன என்று கே.வி. சுப்பிரமணிய அய்யர் கருதுகின்றார்.[6]

பொதுவாக இந்திய நாட்டில் தொடக்கக் காலத்தில் அமைக்கப்பட்ட துறவிகள் இருப்பிடம் இவ்வாறு எளிமையான முறையிலேயே உருவாக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் காணப்படுவது போன்று ஒரிசாவில் காரவேலன் கல்வெட்டுள்ள உதயகிரி, கண்டகிரி குன்றுகளில் சமண சமயத்துறவியர்க்கு உறைவிடங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.[7] எனவே சமணத்துறவியர்க்கு இந்திய வரலாற்றில் தொடக்கக் காலத்தில் உருவாக்கப்பட்ட குகைத்தள அமைப்புமுறையைப் பின்பற்றியே தமிழ்-பிராமி குகைத்தளங்களின் உட்புறம் கற்படுக்கையும் முகப்பில் புருவமும் வெட்டப்பட்டுள்ளன. எனவே இந்த அமைப்புமுறையைப் பௌத்தர்களுக்கு மட்டும் உரியவை என்று கருதமுடியாது. மேலும் இலங்கை பிராமிக் கல்வெட்டுகளும், தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளும் சமகாலத்தவை; முந்தியவை அல்ல என்பதினைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

அடுத்து தமிழ்-பிராமிக் கல்வெட்டுள்ள மலைகளுக்கு மிகப் பிற்காலத்தில் வழங்கிய பெயர்களைக் கொண்டு அவற்றை பௌத்தர்களுக்குரியவை என்று கூறமுடியாது. இவற்றைப் பாமரமக்கள் பஞ்சபாண்டவர் மலை, பஞ்சவர் படுக்கை என்று அறியாமையில் அழைக்கின்றனர். பாண்டவர் வனவாசத்தின் போது வந்து தங்கிய இடமாகக் கருதுகின்றனர் இதனைப் புத்தரோடு தொடர்புபடுத்தி அவர் துறவறம் ஏற்றபின் தங்கி முதலில் உணவு உண்ட இடமான 'பாண்டவ பப்பதம்' என்று மயிலை. சீனி. வேங்கடசாமி, கே.வி.எஸ். கூறுவது முற்றிலும் பொருத்தமற்றது.[8] விக்கிரமங்கலத்தில் தமிழ்-பிராமிக் கல்வெட்டுள்ள மலையை அங்குள்ள மக்கள் அதன் அமைப்பு முறையை வைத்து 'உண்டாங்கல்' (உருண்டைக்கல்) என்று அழைத்து வருகின்றனர் இதனை அய்யர் அவர்கள் கருதுவதுபோல் பௌத்த துறவிகள் உண்ணும் இடமாகக் கொள்ளமுடியாது.

தமிழ்-பிராமிக் கல்வெட்டுள்ள மலைகள் சிலவற்றில் கழுகுகள் வந்து தங்குவதைக் கொண்டு பிற்காலத்தில் கழுகுமலை என்று பெயரிட்டிருக்கின்றனர். புத்தர் வடநாட்டில் தமது துறவு வாழ்வினை மேற்கொண்டு 'கிர்ச்சரகூடம்' என்பதே தமிழ்நாட்டில் கழுகுமலை என்று அழைக்கப்பட்டது[9] என்பது ஏற்றுக்கொள்ள முடியாததாகும். தமிழ்-பிராமிக் கல்வெட்டுள்ள பல மலைகளிலுள்ள பழமையான கல்வெட்டுகள் இதற்குமாறாக அவற்றிற்கு வேறு பெயர் இருந்ததைத் தெரிவிப்பது இங்கு நோக்கத்தக்கது.

தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளில் வரும் 'உபாசகன்', 'மாதவிரை' என்ற சொற்கள் பௌத்த சமய வழக்கிலுள்ள சொற்களாகும். இவை பௌத்த சமயத்திற்குரிது என்று கே.வி. சுப்பிரமணிய அய்யர் கருதுகின்றார். 'உபாசகா' என்ற சொல் 'உபாத்தியாயர்' என்ற சொல்லில் இருந்து வந்தது என்று கூறும் கிருஷ்ணசாஸ்திரிகளின் கூற்றினைக் கொண்டு ஐராவதம் மகாதேவன் இச்சொல் சமண சமயத்தில் பஞ்சபரமேஷ்டிகளில் ஒருவராகக் கருதப்படும் உபாத்தியாயரைக் குறிக்கும் சொல் என்று கருதுகின்றார்.[10] இக்கருத்தினை ஏற்றுக்கொள்ளத் தயங்கினாலும், சமண சமயத்தில் இல்லறத்தினைப் பின்பற்றுவோர் 'உண்ணாநோன்பிகள்', 'சாவகநோன்பிகள்' என்றே தமிழ்நாட்டில் அழைக்கப்பட்டிருக்கின்றனர். சிலப்பதிகாரத்தின் காவியநாயகனாக விளங்கும் கோவலன் சமண சமயத்தினைச் சார்ந்தவர் ஆவார். அவனை இளங்கோவடிகள் 'சாவகநோன்பிகள்' என்றே குறிப்பிடுகின்றார்.[11] எனவே கொங்கர் புளியங்குளம், திருவாதவூர் கல்வெட்டுகளில் வரும் 'உபாசகன்' என்ற சொல் சமண சமயத்து இல்லறத்தாரைக் குறிக்கும் சொல்லாகக் கொள்ளலாம்.

அழகர்கோயில் தமிழ்-பிராமிக் கல்வெட்டில் 'மாதவிரை' 'தவரை' என்று வரும் சொற்கள் பௌத்த சமய பிக்குணி மற்றும் பிக்குவைக் குறிக்கும் என்று கே.வி. சுப்பிரமணிய அய்யர் கருதுகின்றார். இதனால் அழகர்மலைக் குகைத்தளம் பௌத்தர்க்குரியது என்று எண்ணினார். ஆனால் அதனை மீளாய்வு செய்து தற்போது அச்சொற்களை 'மதிரை' என்றும் 'அவ்விருஅர்உம்' என்றும் படித்துள்ளனர்.[12] இதனால் தவறாகப் படிக்கப்பட்ட வாசகத்தினைக் கொண்டும், தவறாகப் பிற்காலத்தில் தமிழ்-பிராமிக் கல்வெட்டுள்ள மலைகளுக்கு வழங்கிய பெயர்களைக் கொண்டும் அவை பௌத்த சமயத்தவர்க்கே முற்றிலும் உரியது என்று கருதுவது தவறான கருத்தாகும்.

மேலும் தமிழ்நாட்டில் பௌத்தம் குறித்து எழுதிய பேராசிரியர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, கே.வி. சுப்பிரமணிய அய்யர் ஆகியோரின் வாதங்கள் ஏற்றுக்கொள்ள முடியாதவையாக உள்ளன. தமிழ்-பிராமிக் கல்வெட்டு குகைத்தளங்களை முற்றிலுமாகப் பௌத்தர்க்கே உரியவை என்று கொள்ளமுடியாது. சமண சமயத்திற்கு உரியவையும் அவற்றில் உள்ளன என்று கூறிச்சென்றுள்ளார்.[13]

**ஆசீவகம்**

மகாவீரர் காலத்தில் வாழ்ந்த 'மற்கலி கோசலர்' என்பவரால் ஆசீவகம் தோற்றுவிக்கப்பட்டது. அசோகனும் அவனது பெயரன் தசரதனும் ஆசீசக சமயத்தவர்க்கு ஆதரவளித்துள்ளனர்.[14] சமணம், பௌத்தம் சங்ககாலத்திலேயே தமிழ்நாட்டிற்கு வந்துவிட்டது போன்று ஆசீவகமும் தமிழ்நாட்டில் சங்ககாலத்தில் வந்துவிட்டதா என்பது ஆய்விற்குரியது. சங்க இலக்கியங்கள் காணப்படும் ஊழ் பற்றின கருத்துக்கள் ஆசீவகர் கொள்கை சங்காலத்தில் பரவிவிட்டது என்பதைக் காட்டுகிறது.

சமண பௌத்த மதங்களைப் போன்றே ஆசீவகச் சமயத்திற்கும் தமிழ்நாட்டில் ஓர் இடம் இருந்திருக்கிறது. ஆனால் நியதி என்றழைக்கப்படும் 'ஊழ்' கோட்பாட்டினைக் கொள்கையாகக் கொண்ட இச்சமயம் சமண பௌத்த சமயங்களைப் போன்று தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்தது என்று கூறமுடியாது.[15]

ஆனால் தமிழ் இலக்கியங்கள் வாயிலாகவே ஆசீவகர் பற்றிய செய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது. சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் தந்தை ஆசீவக சமயத்தில் சேர்ந்ததாகக் கூறப்படுகிறது. மணிமேகலையில் ஆசீவகச் சமயக் கோட்பாடுகள் அக்காவிய காலத்தில் வழங்கிய பிற கோட்பாடுகளோடு எடுத்துக்கூறப்படுகிறது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு சமணசமய காவியமான நீலகேசியில் ஆசீவகக் கோட்பாடுகளுக்கு மறுப்புரை சொல்லப்பட்டிருக்கிறது. கி.பி. 14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சிவஞான சித்தியாரிலும் ஆசீவகக் கோட்பாடுகள் கூறப்பட்டு மறுக்கப்பட்டிருக்கின்றன. தமிழ் நிகண்டுகளிலும் ஆசீவகர் பற்றிய குறிப்புகள் வருகின்றன. சமண, பௌத்த சமயங்களைப் போன்று இலக்கியச் சான்றுகளைத் தவிர்த்து தொல்லியல் மற்றும் பிற சான்றுகளல் ஆசீவக சமயம் குறித்த சான்றுகளைக் காண்பது

அரிதாக உள்ளது. தென்னிந்தியாவில் வழங்கிய சமயத் தத்துவங்களில் ஒன்றாக ஆசீவகம் கருதப்பட்டு அதற்குப் பௌத்தமும், சமணமும், சைவமும் மறுப்புரை வழங்கியதையே தமிழ் இலக்கியங்களில் காணமுடிகிறது.

கி.பி. 14-ஆம் நூற்றாண்டு வரை ஆசீவகர்கள் தமிழ்நாட்டில் வாழ்ந்துள்ளனர் என்பதற்குக் காட்டப்படும் சான்றுகளும் ஏற்றுக்கொள்ள முடியாதவையாகும். ஐயப்பாட்டிற்கும் உரியவையாகும் என்று தமிழகத்தில் ஆசீவகர்கள் பற்றி ஆய்வு செய்த ர. விசயலட்சுமி கருதுவது பொருத்தமாக உள்ளது.[16] தமிழ்க்கல்வெட்டுகளில் வரும் ஆசு, ஆசபொதுமக்கள், ஆசுவிகள், ஆசுவிமக்கள் என்பதை ஆசீவகரைக் குறித்தது என்றும் இவர்களுக்காக விதிக்கப்பட்ட வரி ஆசுவக்கடமை, ஆசுவிகள்பேர் கடமை என்றும் கருதுவது தவறு. ஊர்க்காவல் புரியும் வீரர்கள் பொருட்டு வாங்கப்பட்ட வரி இதுவாகும். ஆசு என்பதற்கு குறுவாள் என்று பொருளாகும். இதனை ஏந்திய வீரர்கள் ஆசுவிகள் எனப்பட்டனர்.[17] சமண, பௌத்த சமயங்களைப் போன்று ஆசீவகர்கள் தமிழ்நாட்டுச் சமூகத்தில் இடம்பிடிக்கவில்லை. இவர்கள் தமிழ்நாட்டில் சமய நிறுவனங்கள் அமைத்து தமது கொள்கைளை மக்களிடையே பரப்பியமைக்கும் தொல்லியல் சான்றுகள் இல்லை. இந்நிலையில் டி.வி. மகாலிங்கம் தமிழ்நாட்டில் இவர்கள் பெற்றிருந்த இடத்தைப் பற்றி கூறுவது[18] மிகைப்படுத்திக் கூறப்பட்ட மிகைக்கூற்றாகவே கொள்ள வேண்டும் என்ற ஐராவதம் மகாதேவன் கருத்து பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளில் உள்ள குகைத்தளங்கள் ஆசீவகர்க்குரியது என்று எடுத்துக்கூறும் நெடுஞ்செழியன் அவர்களின் வாதம்[19] சிந்திக்கத்தக்கது என்றாலும் இவற்றிற்கு வலுவான வரலாற்று ஆதாரங்கள் வேண்டும். க. நெடுஞ்செழியன் தனது கருத்தற்குப் பின்வரும் ஆதாரங்களை முன்வைத்துள்ளார்.

ஐராவதம் மகாதேவன் கூறுவதுபோல் மாங்குளம் கல்வெட்டில் வரும் 'கணி' என்ற சொல் சமண சங்கத்தினைச் சார்ந்த மூத்த துறவியைக் குறிக்கும் சொல்லாகக் கொள்ளமுடியாது என்றும், காலத்தினை அளந்துஅறியும் கணியர் என்பவர்களையே குறிக்கும் என்றும், காலத்தைக் கணித்துக் கூறுவதைச் சமணர்கள் ஏற்பதில்லை என்றும் க. நெடுஞ்செழியன் கருதுகிறார். ஆனால் இதற்கு மாறாகச் சங்ககாலத்தில் மதுரை நகரில் வாழ்ந்த சமணத் துறவிகள் முக்காலத்தினையும் அளந்து அறியும் பண்பினைப் பெற்றிருந்தனர் என்று மதுரைக்காஞ்சி கூறுவது இங்கு கருதத்தக்கது.

நிறக்கோட்பாட்டின்படி பிறப்பை ஆசீவகர்கள் பிரித்துள்ளனர். இதில் இறுதியாக வருவது வெண்பிறப்பு, கழிவெண்பிறப்பு ஆகும். கழிவெண்பிறப்பை அடைந்தவர்களே வீடுபேறு பெறமுடியும் என்று ஆசீவகர் கூறுவர். கலிவெண்பிறப்பு 'பரமசுக்க' (உயர்ந்த வெள்ளை) என்று பாலி, பிராக்கிருத மொழிகளில் கூறப்படும். சங்க இலக்கியப் புலவர்களான ஓலைக்கடையத்தனார் நல்வெள்ளையார், முக்கல் ஆசான் நல்வெள்ளையார் ஆகியோர் பரமசுக்க நிலையை அடைந்தவர்கள் என்றும் இதேபோன்று மறுகால்தலை தமிழ்-பிராமிக் கல்வெட்டு குறிக்கும் 'வெண்காசிபன்' என்பவனும் ஆசீவகச் சமயத்தைச் சார்ந்த 'பரமசுக்க' நிலையை அடைந்தவர் என்றும் க. நெடுஞ்செழியன் கருதுகின்றார். இதேபோன்று விக்கிரமங்கலம் கல்வெட்டில் குறிப்பிடும் வெந்ஆதன் (வெண் ஆதன்) ஆசீவகச் சமயத்தினரைச் சார்ந்தவன் என்றும் கருதுகின்றார். இதனால் தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் காணப்படும் குகைத்தளங்கள் அனைத்தும் ஆசீவர்களுக்கு உரியவை என்றும், ஐராவதம் மகாதேவன் கூறுவது போன்று சமண சமயத்திற்கு உரியவை அல்ல என்றும் கருதுகின்றார். கருமை, வெள்ளை, வெண்மை என்று நிறங்களை அடிப்படையாகக் கொண்டு மனிதர்களுக்குப் பெயரிடும் பொதுவழக்கம் பழங்காலத்தில் இருந்துள்ளது. இதற்குச் சமயப்பின்னணி கொடுத்து பொருள் கூறுவது சிந்திக்கத்தக்கது என்றாலும் இதனை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நிறப்பெயர்களைப் பெற்றவர்கள் அனைவரும் ஆசீவகர்கள் என்று கருதிவிட முடியாது.

**சமணம்**

தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் உள்ள குகைத்தளங்களை பௌத்தர்க்குரியவை அல்ல என்று கூறி அவை சமணர்க்குரியதாகக் கருதும் இரா. நாகசாமி, அதற்குப்பின்வரும் காரணங்களைக் கூறுகின்றார்.[20] தமிழகம் பௌத்த சமயத்தினை ஆதரித்த அசோகனது ஆட்சிப்பரப்பில் இல்லாதது, சுயாட்சி படைத்த தமிழ் மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. இதனால் பௌத்த சமயத்தினைப் பரப்புவதற்குரிய அசோகனது அதிகாரிகள் தமிழ்நாட்டில் இல்லை. எனவே பௌத்தம் தமிழகத்தில் வளர வாய்ப்பில்லாமல் போயிற்று. தமிழ்நாட்டு அகழாய்வில் பெரிய அளவிலான புத்த சமயச்சின்னங்கள் கண்டறியப்படவில்லை. தமிழ்-பிராமிக் கல்வெட்டுக் குகைத்தளங்களில் பிற்காலத்தினைச் சார்ந்த பௌத்த சமய எச்சங்கள் காணப்படவில்லை. அவற்றில் சமண சமய எச்சங்களாக தீர்த்தங்கரர் சிற்பங்களே

காணப்படுகின்றன. பௌத்த பிக்குகள் மற்றும் சங்கங்கள் பற்றிய குறிப்புக்களைத் தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளில் காணமுடியவில்லை. தமிழ்நாட்டு மன்னர்கள் சமண சமயத்திற்கே ஆதரவு அளித்துள்ளனர். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்நாட்டு மன்னர்கள் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறியதாகக் கூறுகின்றனரே அன்றிப் பௌத்தத்திலிருந்து மாறியதாகக் கூறவில்லை. எனவே சமணத்தின் செல்வாக்கு தமிழ்நாட்டில் குறிப்பிடத்தக்க அளவு இருந்தது. பௌத்த சமயத்திற்கு இத்தகைய ஆதரவு இல்லை என்று இரா. நாகசாமி கருதுகின்றார். இதேபோன்ற கருத்தினை கே.வி. இராமனும் கொண்டுள்ளார்.[21] சமணரை வாதிட்டு வெல்ல மதுரைக்கு கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வந்த சம்பந்தர் தமது மதுரைப் பதிகத்தில் மதுரையைச் சுற்றியிருந்த ஆனைமலை முதலிய குன்றங்களில் சமணர்கள் இருந்ததாகக் குறிப்பிடுகின்றார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இரா. நாகசாமியின் மேற்கண்ட கருத்துக்களை ஆ. வேலுப்பிளளை மறுத்தாலும்[22] தமிழ்-பிராமிக் கல்வெட்டு குகைத்தளங்கள் பௌத்தர்க்குரியவை என்று அவரால் உறுதி செய்ய இயலவில்லை. டி.வி. மகாலிங்கத்தினைப் பின்பற்றி இக்குகைத்தளங்களைப் பௌத்த-சமண-ஆசீவக சமயத்திற்குரியதாக இருக்கவேண்டும் என்று கூறுகின்றார். இவை ஒரே சமயத்திற்குரியவை அல்ல என்று கருதுகின்றார். ஆனால் அண்மையில் ஐராவதம் மகாதேவன் நூல் வெளிவந்தபோது அதனை மதிப்பீடு செய்த ஆ. வேலுப்பிள்ளை தமது கட்டுரையில்[23] தமிழ்-பிராமிக் கல்வெட்டுக் குகைத்தளங்கள் சமண சமயத்திற்குரியவை என்னும் மகாதேவன் கூற்றினை மறுக்கவில்லை.

அண்மையில் வெளியிடப்பட்ட ஐராவதம் மகாதேவன் அவர்களின் தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் குறித்த நூல் தமிழ்-பிராமிக் கல்வெட்டு குகைத்தளங்கள் சமண சமயத்திற்கே உரியவை என்றே கூறுகிறது. இதற்குச் சான்றாக இந்நூலில் பல அகச்சான்றுகளையும், புறச்சான்றுகளையும் ஐராவதம் மகாதேவன் எடுத்துக் காட்டியுள்ளார் (பக். 126-139). தமிழ்-பிராமி குகைத்தளங்கள் பௌத்தர்க்குரியவை என்று கருதும் கே.வி. சுப்பிரமணிய அய்யர், வெங்கையா, எச். கிருஷ்ண சாஸ்திரி ஆகியோரின் கருத்துக்கள் தவறு என்பதைத் தற்போது முழுவதுமாகப் படிக்கப்பட்ட பிராமிக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன என்கின்றார் மகாதேவன்.

முன்னர் கண்டபடி உபாசகன் என்ற சொல்லும், மாதவிரை என்ற சொல்லும் பௌத்த சமயச் சார்புடையவை அல்ல என்கின்றார். அழகர்மலைக் கல்வெட்டில் வரும் 'பம்மிதி' என்ற சொல் சமணப்பெண் துறவியைக் குறிக்கும் சொல் என்று கூறுகின்றார். மாங்குளம் கல்வெட்டில் வரும் 'கணி' என்ற சொல் சமணத் துறவிகளின் தலைவரைக் குறிக்கும் (மூத்த ஆச்சாரியர்) சமண சமயத்திற்குரிய சொல் வழக்காகும். அமணன் என்ற சொல் வரும் புகளூர் கல்வெட்டிற்கு முற்பட்ட காலத்தினைச் சார்ந்த கி.மு. இரண்டாம் நூற்றாண்டு மேட்டுப்பட்டி தமிழ்-பிராமிக் கல்வெட்டில் 'அமணன்' என்ற பெயர் வருகிறது. சிரமணன் என்ற சொல்லில் முதலில் உள்ள அகரம் கெட்டு அமணன் என்று மாறி உள்ளது. அமணன் என்ற சொல் வடஇந்தியாவில் உடலை வருத்தித் தவஞ் செய்யும் பௌத்த-சமண-ஆசீவகத் துறவிகளைக் குறித்தாலும் தமிழ்நாட்டில் சமணரைக் குறிக்கவே இச்சொல் வழங்கப்பட்டுள்ளது என்கிறார் மகாதேவன்.

அசோக மன்னன் தமது கல்வெட்டுகளில் பௌத்த சமயத்தவரைக் குறிக்க சங்கத்தினைக் குறிப்பிட்டுள்ளான். சமண சமயத்தவரைக் குறிக்க 'சிரமணர்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளான்[24] ஆசீவகரைக் குறிக்க ஆசீவகர் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளான். எனவே மேட்டுப்பட்டி புகளூர் கல்வெட்டுகளில் வரும் அமணன் என்ற சொல் சமண சமயத்தவரையே குறித்தது எனலாம். தமிழ்-பிராமிக் கல்வெட்டுக் குகைத்தளங்களைப் பௌத்த சமயத்தினைச் சார்ந்தவை என்று கே.வி. சுப்பிரமணிய அய்யர் போன்றோர் எழுதிய காலத்தில் 'அமணன்' என்ற சொல் வரும். தமிழ்-பிராமிக் கல்வெட்டுகள் கண்டறியப்படவில்லை என்பது இங்கு குறிப்பிடப்பட வேண்டும்.

மேட்டுப்பட்டி கல்வெட்டில் மதுரையைச் சார்ந்த 'அமணன் அத்திரன்' என்பவன் குறிப்பிடப்படுகின்றான். சங்க நூலான மதுரைக்காஞ்சி மதுரையில் இருந்த பல்வேறு சமய இருக்கைகள் பற்றிக் கூறும்போது மதுரையில் இருந்த சமணப்பள்ளி பற்றியும் அதில் உறைந்த சமண முனிவர்களை வழிபடச் சென்ற சமண சமய இல்லறத்தார் பற்றியும் கூறுகிறது. மதுரையில் பௌத்த-ஆசீவகப் பள்ளிகள் இருந்ததாகக் குறிப்பிடவில்லை. மதுரைக்காஞ்சி குறிப்பிடும் கடவுள் பள்ளியை பௌத்தப் பள்ளி என்று நச்சினார்க்கினியர் கூறுவார். இதனை தவறு என்று பலர் கருதுகின்றனர். இதனால் தமிழ்நாட்டில் அதிக அளவில்

மதுரையைச் சுற்றிக் காணப்படும் தமிழ்-பிராமிக் குகைத்தளங்களையும் அதேபோன்று பிற இடங்களில் காணப்படும் தமிழ்-பிராமி குகைத்தளங்களையும் சமணர்க்குரியதாகக் கருத வேண்டியுள்ளது.

**முடிவு**

இன்றைய நிலையில் புதிய தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளின் கண்டுபிடிப்புகளும், பழைய-புதிய கல்வெட்டுகளை மீளாய்வு செய்த அவற்றைத் திருத்தமுறப்படித்த தமிழ்-பிராமிக் கல்வெட்டு வாசகங்களும், தமிழ்-பிராமி குகைத்தளங்கள் சமணசமயச் சார்புடையவை என்று கருதுவதற்கு மிகுந்த வாய்ப்பளிக்கின்றன. இந்நிலையில் வேறு சான்றுகள் கிடைக்கும் வரை ஐராவதம் மகாதேவன் அவர்களின் கருத்தினையே ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது.

**அடிக்குறிப்புகள்**

1. T.V. Mahalingam, Early South Indian Palaeography, University of Madras, 1974, p.176
2. A. Velu Pillai, Epigraphical Evidences for Tamil Studies, International Institute of Tamil Studies, Chennai 1980, p.92
3. K.V. Subramaniya Ayyar,The Earliest Monuments of the Pandya Country and their Inscriptions, Proceedings and Transactions of the third oriental conference of Madras, 1924.

   மயிலை. சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், கழக வெளியீடு, சென்னை, 1957, பக். 60-63, 64-70.
4. க. நெடுஞ்செழியனின் ஐராவதம் மகாதேவனது "Early Tamil Epigraphy from the Earliest Times to the Sixty Century A.D."
5. H. Krishna Sastri, ARE 1919, pp. 330-332; ARE 1908-09 paragraph-7
6. The Earliest Monuments of the Pandya Country and their Inscriptions.
7. Jains Art and Architecture, Vol. I, A. Ghosh (Ed.) Bharatiya Janampit, New Delhi-1974, pp. 74-81.
8. பௌத்தமும் தமிழும் பக் 64-67
9. மேலது. பக் 71-72
10. I. Mahadevan, "Early Tamil Epigraphy from the Earliest Times to the Sixty Century A.D.," Cre-A, Chennai and Harvard University, USA, p. 127.
11. சிலப்பதிகாரம், கொலைக்களக்காதை அடி. 18-19

12. I. Mahadevan, pp. 371, 379
13. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, தமிழ்நாட்டில் பௌத்தம், சிந்தனை, பேராதனை 1968
14. ர. விஜயலட்சுமி, தமிழகத்தில் ஆசீவர்கள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1988 பக். 99
15. A.L. Bashiam, The Wonder That was India, Rupa.Co.Calcutta, 1998, pp. 294-296

    A.L. Basham, History and Doctriences of the Ajivikas, Reprint 1981, Delhi
16. தமிழகத்தில் ஆசீவர்கள்; பக். 100
17. எ. சுப்பராயலு, தமிழ்க்கல்வெட்டுச் சொல்லகராதி, முதல் தொகுதி அ-ஞெ, சாந்தி சாதனா, சென்னை, 2003, பக். 46
18. Early South Indian Palaeography, p. 188
19. க. நெடுஞ்செழியனின் ஐராவதம் மகாதேவனின் நூல் மதிப்பீட்டுக் கட்டுரை
20. R. Nagaswamy, "The origin of Tamil Brahmi Script" (Ed) S.P. Gupta, K.S. Ramachandran, Delhi 1980, pp. 80-81
21. K.V. Raman, The Brahmi Inscriptions of Tamilnadu: An Historical Assessment, The Srilanka Journal of South Asian Studies, Vol. I, Jaffna 1976
22. Epigraphical Evidences for Tamil Studies, pp. 88-90
23. International Journal of Dravidian Linguistics, IJDL Vol. XXXIII No. I, Trivananthapuram, 2003
24. Early South Indian Palaeography, p.167
25. மதுரைக்காஞ்சி அடி. 475-488
24. Epigraphical Evidences for Tamil Studies, p.100




# 6 முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு

நா. கணேசன்
மண்டல உதவி இயக்குநர்
மதுரை

மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் மதுரையிலிருந்து 20 கிலோ மீட்டர் தொலைவில் மேலூருக்கருகில் அரிட்டாபட்டி என்ற ஊர் அமைந்துள்ளது. அவ்வூரிலுள்ள கழிஞ்சமலையில் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் நெல்வேலி சிழிவன் அதினன் வெளியன் என்பவனும், இலஞ்சி எளம் பேராதன் மகன் எமயவன் என்பவனும் சமணத்துறவிகள் தங்குவதற்கு குகைத்தளங்களையும், படுக்கைகளையும் (முழாகை) அமைத்துக் கொடுத்துள்ளனர். இச்செய்தி இம்மலையில் பண்டையத் தமிழ் (தமிழ்-பிராமி) எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளன.

கழிஞ்ச மலைக்கருகில் 'ஆப்டான் மலை', 'ராமாயி மலை' என்ற இரு மலைகள் உள்ளன. இம்மூன்று மலைகளிலிருந்து வரும் மழை நீரை பாசனத்திற்காகவும், குடிநீர்த் தேவைக்காகவும் தேக்கி வைப்பதற்குப் பெரிய கண்மாயை வெட்டி, தண்ணீரை ஒழுங்குபடுத்திட குமிழி (மதகு) அமைக்கப் பட்டுள்ளது. இக்குமிழித்தூண்களில் கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டொன்று புதிதாகக் கண்டறியப்பட்டது.

பாண்டிய நாட்டை கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் (கி.பி. 1216 முதல் கி.பி. 1244 வரை) முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சி செய்தான். இம்மன்னனின் ஆட்சிக்காலத்தில் நிகழ்ந்த வரலாற்று நிகழ்வினை வெளிப்படுத்தும் கல்வெட்டு இக்குமிழித்தூண்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1. ஸ்ரீ சோணா
2. டு கொண்
3. டருளிய வீ
4. ர அபிஷேக
5. விசைய அ
6. பிஷேகம்
7. பண்ணிய
8. ருளிய சுந்
9. தர பாண்டி
10. ய தேவற்
11. கு யாண்டு
12. பதினஞ்சா
13. வது பொதிகை
14. வளவன் ஸ்ரீ ஆ
15. ணை மேல் ெ
16. காண்டான்
17. கல்லுவித்
18. ..ம் நாட்

என்ற இக்கல்வெட்டின் தொடக்கத்தில் 'ஸ்ரீசோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவற்கு' என்ற தொடர் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனைக் (கி.பி. 1216- கி.பி.1244) குறிப்பதாகும். முதலாம் மாறவர்ம சுந்தர பாண்டியன் சோழநாட்டின்மீது மூன்று முறை படையெடுத்துள்ளான். இம்மன்னன் படையெடுத்தபொழுது சோழ நாட்டை ஆட்சி செய்த மன்னன் மூன்றாம் இராஜராஜ சோழன் ஆவான். இரண்டாம் முறை வெற்றி கண்டபொழுது சோழ நாட்டின் தலைநகரான முடிகொண்ட சோழபுரத்து (பழையாறை) அரண்மனையில் வீற்றிருந்து வீராபிஷேகமும், விஜயாபிஷேகமும் செய்து கொண்டான். இந்நிகழ்வு கி.பி. 1227-இல் நடைபெற்றதாக இம்மன்னனின் 11-ஆவது ஆட்சியாண்டு ஜம்புகேஸ்வரம் கல்வெட்டு குறிப்பிடுகிறது. அதன் பிறகு காணப்படும் இம்மன்னனது மெய்க்கீர்த்திகளில் வீராபிஷேகமும், விஜயாபிஷேகமும் பண்ணியருளிய என்ற தொடர் பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

இம்மன்னனின் பதினைந்தாவது ஆட்சியாண்டில் கி.பி. 1231-இல் 'பொதிகை வளவன் ஸ்ரீ ஆணைமேல்கொண்டான்' என்பவன் அரிட்டாப்பட்டி கழிஞ்சமலையின் அடிவாரத்தில் பெரிய கண்மாயை வெட்டி அதில் குமிழி (மதகு) அமைத்துக் கொடுத்துள்ளான். இச்செய்தி மேற்காணும் கல்வெட்டில் பொறிக்கப் பட்டுள்ளது. பிற்காலத்தில் 'ஆணைமேல்கொண்டான் கண்மாய்' என்பது மருவி 'ஆனகொண்டான் கம்மாய்' என்று மக்களால் தற்போது அழைக்கப்படுகின்றது. கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு வரை பாண்டிய நாட்டில் 'அரிட்டாப்பட்டி' புகழ்பெற்ற ஊராக விளங்கியதை மெய்ப்பிக்கும் சான்றாவணங்களாக அங்குள்ள குகைத்தளமும், குடைவரைக்கோயிலும், அவற்றிலுள்ள கல்வெட்டுகளும் திகழ்கின்றன. கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் 'நீர் மேலாண்மை நிர்வாகம்' சிறப்பாகச் செயல்பட்டதை புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட கண்மாய்க் கல்வெட்டு உணர்த்துகிறது.

'நீரின்றியமையாது உலகெனின்', 'ஏர்பின்னது இவ்வுலகு' என்பதன் உண்மையை உணர்ந்த முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 13-ஆம் நூற்றாண்டிலேயே கண்மாய் வெட்டி, கரையமைத்து, தண்ணீரைத் தேக்கி வைத்து, அத்தண்ணீரை வேளாண்மைக்கும், குடிநீருக்கும் முறைப்படுத்தி வழங்க குமிழியை (மதகு) நிர்மாணித்து தண்ணீர் ஒழுங்குமுறைத் திட்டத்தைத் சிறப்பாகச் செயல்படுத்தியுள்ளான். இவ்வரலாற்று நிகழ்வினை உணர்த்திடும் கல்வெட்டே அரிட்டாபட்டி கண்மாய்க் கல்வெட்டாகும்





எம்பெருமக்கள் வழிபாடு கூறும் ஆறகளூர் கல்வெட்டு



தேவார மூவர் முதலிகள் சிற்பங்கள், ஆறகளூர்



மகதை நாடாழ்வான் இராசராச
வாணகோவரையன் சிற்பம்



முதலாம் மாறவர்மன்
சுந்தர பாண்டியனின்
கண்மாய் கல்வெட்டு
கி.பி. 13-ஆம் நூற்றாண்டு